# அறியாவினா.

சித்தாந்த பத்திரிகாசிரியரவர்கட்கு வந்தனம்

ஐய!

நானொரு வைணவச் சிறுவன், தாங்கள் சைவசித்தாந்த மகாசமாஜ த்தின் சம்பந்தமாக வெளியிட்டுவரும் 'சித்தாந்தம்" என்னும் பத்திரி கையை மூன்று வருடங்களாக நன்கு கவனித்துப்படித்து வருகிறேன். அப்பத்திரிகையிற் குறித்த “அத்துவிதம்”, "சதுர்த்தம்", “சித்தாந்தம், "மகாவாக்கியம்" முதலிய அறியவிஷயங்களும், மற்றும்பல மேதாவியர்கள் எழுதிவரும் அரியபெரிய விஷயங்களும் சுருதியுக்தி அனுபவங்கட்குப் பொருத்தமாகவே யுள்ளன. அன்றியும், தாங்கள் மொழி பெயர்த்தெழுதிய "சரபோபநிஷத்து, "அதர்வசிகோபநிஷத்து", "பஞ்சபிரமோபநிஷத்து" இவைகளில் கண்ட “பிரமம்”, "பிரணவம்,” “அட்சரம்”, "'புருஷன்”,' முதலிய பதங்கட்குச் சிவபெருமானே பொருளெனச் சுருதிப்பிரமாணங்களுடன் தாபித்தவற்றையும் தேர்க்தேன், பின்னர். பிரமஸ்ரீ காசிவாசி செந்திநாதையசுவர்கள் அச்சிட்ட ஸ்ரீநீலகண்டபாஷியம், ஸ்ரீமத் நல்லசாமிப் பிள்ளையவர்களியற்றிய “The Study” ஸ்ரீமத்சபாரத்தின முதலியாரவர்களியற்றிய “Essential of Hinduism” ஆகிய நூல்களை யழைப்பித்துப்படித்தேன். தாங்கள் இயற்றிய “பகவத்கீதார்த்தபங்கம்”, தங்கள் மாணவர் இயற்றிய "வேதாந்தபுண்டர விசாரம்" முதலியவற்றையும் பார்வையிட்டேன். இத்தகைய வெனது ஆராய்ச்சியால், வேதசம்மதமான சமயம் வைதிக சைவமே யெனத் தீர்மானித்தேன். விபூதி உருத்திராட்சம் பூண்டேன், கண்ணபிரான் எனும். இயற்பெயரை மாற்றிக் கண்ணப்பன் ஆயினேன். இனி சுமய சமஸ்காரமும் விசேட தீட்சையும் பெறத் திருவருளை நாடிக் சமயம் பார்த்துக் கொண்டிருக்கின்றேன்.

நிற்க, எனைச் சூழ்ந்துள்ள வைணவர்கள் சிலர் நூற்றெட்டு உபநிடதங்களும், "ஹரிஓம்" என ஆரம்பிப்பதினால் எல்லா உபநிடதங்களும் விஷ்ணுசம்பந்த முடையதே யெனக்கூறி யெனை மிரட்டு கின்றனர். ஆகலின் தாங்கள் கருணைகூர்ந்து “ஹரிஓம்” என்று சொற்குப் பொருள் விளக்கி விடை கூறுமாறு வேண்டிக்கொள்ளுகிறேன்.

சித்தாந்த பத்திரிகை
முகத்துமாணாக்கன்
துறைசை, கண்ணப்பன்..

## விடை

செல்வச் சிரஞ்சீவி - துறைசை - கண்ணப்பனுக்கு, அறுமுகச் சிவனார் திருமுகக் கருணையாண்டும் நின்றருள் புரிக.

அன்ப!

"ஹரிஓம்" என்பது உமாபதியினையே குறித்தவாக்கிய மென்பது வேதசம்மதம். எங்ஙனமெனின் கூறுதும் - "பராஸ்ய சக்திர்வி விதைவச் ரூயதேஸ்வாபாவி கீஜ்ஞா: நபலக்ரியாச" (மகேஸ்வரருடைய பராசக்தி சுவாபாவிக ஞானசத்தியும், பலசத்தியும், கிரியாசத்தியும் ஆகப்பலதிறப்படுவள்:) எனும் சுவேதாச்வதரோய நிஷத்தானும்; "அபரேது பராசக்திச் சிவஸ்யசமவாயிக், தாதாத்ம்ய மதயோர்த்தித் யம் வஹ்திதாஹகயோரிவ, அதஸ்தத்தர்ம்ம தர்ம்மித்வாத் பராசத்தி : பராத்மக:" (பராசத்தி சிவனுக்குச் சமவாய சம்பந்தத்தோடுற்றவள், அக்கினியும் சூடும் போலப் பராசத்தியும் பரமான்மாவும் குண ஆகவே தேவி ரொஹ்மி சத்தனன், சத்தி சதாது. உருத்திரி சத் வர் கரி சதி குணித்தன்மையர்) எனும் வாயுசங்கிதையானும், சிவபெருமான் எக்காலும் சிவசத்தியுடன் கூடியேயிருப்பவரென்பதாயிற்று, குணமின்றிக்குணியும், குணியின்றிக்குணமும் இல்லாமைபோல, சத்தியின்றிச் சிவமும், சிவமின்றிச்சத்தியும் இல்லையென்பது நிச்சயமாம். ஆகவே சத்திபிராஹ்மி சத்தன் பிரமம், சத்தி சிவை சத்தன் சிவன், சத்தி மகாதேவி சத்தன் மகாதேவன், சத்தி சதாசிவை சாத்தன் சதா சிவன், சத்தி மகேஸ்வரி சத்தன் மகேஸ்வரன், சத்தி உருத்திரி சத்தன் உருத்திரன், சத்தி சங்கரி சத்தன் சங்கரன், சத்தி அரி சத்தன் அரன், ஆகவே அரியென்பது உமாதேவியைக் குறிக்கும்பதமாம்.

தாமசமனுவந்தரத்திலே அரியை யென்கிறவள் கருப்பத்திலே அரிகள் என்கிற தேவர்களுடன் விஷ்ணு பிறந்தமையின், விஷ்ணுவுக்கு அரியெனும் பெயர் வந்ததாக விஷ்ணுபுராணம் கூறுமாற்றால், விஷ்ணுவுக்கும் அரியென நாமமுண்டு, ஆகலின் இவ்விஷ்ணுவாகிய அரிக்கு மேற்சொன்ன உமாதேவியாகிய அரிக்கும் வேற்றுமை தெரிந்து கொள்ளுக. இன்னும், "ஈச்வரீம் ஸர்வபூதாநாந்தாமி ஹோபஹ்ன யேச்ரியம், ஸ்ரீர்ம்மே பஜது அலக்ஷ்மீர்ம்மே நச்யது, விஷ்ணு முகா வைதேவாச்சந்தோ பிரிமாந்லோகாநந பஜ்ய்யமங்யஜயந், மஹாம் இந்த் ரோவஜ்ர பாஹூஷ்ஷோடசீசர்ம்மயச்சது." (சோடசீரூபிணியும், வித்யாரூபிணியுமாகிய ஈசுவரியை அவாவுகின்றேன். திருவையெனக்கு அருள்வாயாக : மூதேவி தொலைக : விஷ்ணு முதலிய தேவர்கள் எந்தச்சோடசீயாகிய வுன்னைச் சந்தமுறையின் வழுவாமலுபாசித்து உலகங்களில் நிகரில்லாது விளங்குகின்றனரோ அவர்கள் வழியே மகானும் வச்சிரமேந்தினவனுமாகிய இந்திரனுமாவன்) எனத்தைத்திரீயா ருணசாகை நாராயணம் கூறுமாற்றால், விஷ்ணுவாகிய அரிக்கு உமா தேவியாகிய அரி உபாசனாதேவி யென்பதும் பெறப்பட்டது. இவை முதலிய பலிஷ்ட பிரமாணங்களால் ஹரி எனும் சப்தத்திற்குப் பொருள் உமையென்பது வச்சிரலேபமாயிற்று.

நிற்க, "அகாரம் ப்ரஹ்மாணம்", "உகாரம் விஷ்ணும், மகாரம் ருத்ரம், ஓங்காரம்ஸர்வேஸ்வரம்" எனும் நிருஸிஹ்மோத்தர தாபின்யுபநிஷத்தாலும்; "ஓங்காரோ வேதபாஈசாவோ சிவஏகோத்யேயா,'" எனும் அதர்வசிகோபநிஷத்தாலும், "கைலாசசிகராவாஸ மோங்கார ஸ்வரூபிணம் மகாதேவம்" எனும் பஸ்மஜாபாலோப நிஷத்தானும்; "ஓம்மஹாக்ராஸாய மகாதேவாய சூலி நே," எனும் சரபோபநிஷத்தாலும் ஓம் என்பது சிவபெருமானையே குறிக்கும். "ஸர்வஜ்ஞ: பஞ்சக் தெய்ஸம்மங்கஸ் ஸர்வேஸ்வர ஈச: பசுபதி: " என்ற ஜாபாலயுபநிஷத்தால் அச்சிவம்பதியே யாகையால், ஓம் என்பது பதியாய், ஹரி என்பது உமையாய், ஹரிஓம் என்பது உமாபதியாய் முடிந்தமை காண்க.

ஹரிஓம் = உமாபதி.

பத்திராதிபர்.

சித்தாந்தம் - 1914 ஸ்ரீ - செப்டம்பர் மீ